Regd. No. TN-MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G 6-TN-Ms C. P. P. 55



**கலை**

மக்களின் மனதைப் பண்படுத்தும் அரிய சாதனம் கலை. சமுதாயத்தின் மாற்றத்திற்கும், மறுமலர்ச்சிக்கும் பெரிதும் உதவுகிறது கலை.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**சீர்திருத்தம**

பகுத்தறிவைக் கொண்டு ஆராய்ச்சி செய்து சரி என்று பட்டபடி நடவுங்கள். அதுவே சீர்திருத்தம்.

-தந்தை பெரியா



மலர் : 9 சென்னை 5-4-1985 வெள்ளி ★ ★ ★ வெளியூர் 6-4-1985 சனி இதழ் 168

இட நெருக்கடியால்

## ரயில் மேல் பயணம்: இரும்பு பாலத்தில் அடிபட்டு 16 பேர் சாவு

புதுடெல்லி, ஏப். 5— ரயிலில் உள்ளே செல்ல இடமில்லாமல் ரயிலின் கூரை மீதுபயணம் செய்த 16 பேர் பரிதாபகரமாக மரணம் அடைந்தனர்.

இந்த கோர விபத்து ஹவுரா மெயிலில் நடந்துள்ளது.

ஹவுராமெயில் கங்கை ஆற்றை கடந்தபோது விபத்து ஏற்பட்டது.

உத்தரப்பிரதேசத்தில் கங்கை ஆற்றின் குறுக்கே உயரம் குறைந்தஇரும்புப் பாலம் ஒன்று பஜ்ளேர்-முந்தாபாத் இடையே உள்ளது. அந்தப்பாலத்தின் மீது ரெயில் சென்றபோது கூரை மீது இருந்தவர்கள் இரும்புக் சுர்டரில் அடிபட்டு பரிதாபமாக மரணம் அடைந்தனர்.

மற்றும் 13 பேர் காயம் அடைந்தனர். இவர்கள் மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டுள்ளனர்.

பாலத்தில் ரயில்சென்றபோது பயத்தால் சிலர் கங்கையில்குதித்ததாகவும் அப்போது அவர்கள் அடிபட்டுவிட்டதாகவும் ஒரு அதிகாரி கூறினார்.

லண்டனில்

## சீக்கியர் ஊர்வலம்: அனுமதி மறுப்பு

லண்டன், ஏப். 5— லண்டனில் சீக்கியர்கள் ஊர்வலம் நடத்த இங்கிலாந்து அரசு அனுமதி அளிக்க மறுத்து விட்டது.

8ந்தேதி சீக்கியர் மாநாட்டு முடிவில் ஊர்வலம் ஒன்றை நடத்த சீக்கியர்கள் திட்டமிட்டிருந்தனர்.

சட்டம்ஒழுங்கைக்கருதி ஊர்வலத்திற்கு அனுமதி மறுக்கப்பட்டதாக இங்கிலாந்துஉள்துறைஅதிகாரி ஒருவர் கூறினார்.

சுமார் 8 ஆயிரம் சீக்கியர்கள் இந்த ஊர்வலத்தில் பங்கேற்பதாக இருந்தது.

★★

திருச்செந்தூர் தேர்தலில்

## 13 பேர் போட்டி

திருநெல்வேலி, ஏப். 5— திருச்செந்தூர் நாடாளுமன்றத் தொகுதி இடைத்தேர்தலில் இ. காங்கிரஸ் வேட்பாளர் தனுஷ்கோடி ஆதித்தன் ஜனதாக் கட்சு வேட்பாளர் பொன். விஜயராகவன் உட்பட 13 வேட்பாளர்கள்போட்டியிடுகிறார்கள்.

முன்னாள் எம். எல். ஏ எம். எஸ். செல்வராஜன் இ. காங்கிரஸ் வழக்கறிஞர் ஜவகர்ராஜ் உட்பட 9 பேர் வாபஸ் பெற்றுக் கொண்டனர்.

கோலாலம்பூரில்

## தமிழ்நாட்டை சேர்ந்தவர் சுட்டுக்கொலை

கோலாலம்பூர், ஏப். 5- தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்தவர முகமது ஜக்கரியா (வயது 30) இவர் பினாங்கில் இருந்து கோலாம்பூரில் நண்பர்களைச் சந்திக்க வந்தார்.

அப்போது ஜக்கரியா காரில் வந்துகொண்டிருந்தபோது ஏர் ஆசாமி காரை நிறுத்தி சுட்டான். இதில் காரின் கண்ணாடிகள் நொறுங்கின.

ஜக்கரியா காரிலிருந்து இறங்கியபோது அந்த ஆசாமி சுட்டதில்நெற்றியில் குண்டு துளைத்து அதே இடத்தில் இறந்தார்.

ஜக்கரியாவுடன் வந்த ஷர்புதீன் அகமது விற்குகையில்குண்டுகாயம் ஏற்பட்டது

கோலாலம்பூர் போலீசார் இதுகுறித்து விசாரித்து வருகிறார்கள்,

# ஓட்டல்களில் இட்லி - தோசை - வடை விலையைக் குறைக்க புதிய சட்டம்

## 'அரசிடம் 7 லட்சம் டன் அரிசி கையிருப்பு' அமைச்சர் திருநாவுக்கரசு தகவல்

புதுக்கோட்டை, ஏப் 5- ஓட்டல் பண்டங்களின் விலையைக் குறைக்க தமிழக அரசு தீவிரமாக ஆலோசித்து வருகிறது. விலைகளைக் கட்டுப்படுத்த புதிய சட்டமொன்றினைக் கொண்டுவர அரசு உத்தேசித்துள்ளது என்று உணவு அமைச்சர் திருநாவுக்கரசு தெரிவித்தார்.

அரசிடம் ஏழு லட்சம்டன் அரிசி கையிருப்பில் இருக்கிறது எனவே அரிசி பற்றாக்குறை என்ற பேச்சுக்கே இடமில்லையென்றும் அவர் கூறினார்

அரிசிஆலைகளை நவீனமயமாக்குதல் குறித்து ஒரு கருத்தரங்கு புதுக்கோட்டையில் நடந்தது. இக்கருத்தரங்கில் கலந்து கொண்டு தமிழக உணவு அமைச்சர் திருநாவுக்கரசு உரையாற்றினார்.

இந்தக் கருத்தரங்கில் அமைச்சர் திருநாவுக்கரசு பேசும்போது கூறியதாவது;-

ஓட்டல் பண்டங்களின் விலைகள் உயர்ந்து கொண்டு போகின்றன. இதனால் பொதுமக்கள் அவதிக்குள்ளாகியிருக்கிறார்கள்.

ஓட்டல் பண்டங்களின் விலையைக் குறைக்க தமிழக அரசு தீவிரமாக ஆலோசித்து வருகிறது. ஓட்டல் பண்டங்களின் விலைகளை கட்டுப்படுத்த புதிய சட்டமொன்றினைக் கொண்டுவர அரசு உத்தேசித்துள்ளது.

### பற்றாக் குறையா?



அரசின் கையிருப்பில் ஏழு லட்சம் டன் அரிசி இருக்கிறது. எனவேதமிழகத்தில் அரிசி பற்றாக்குறை என்ற பேச்சுக்கே இடமில்லை.

இவ்வாறு திருநாவுக்கரசு கூறினார்.

செங்கை மாவட்டத்தில்

## இலங்கைத் தமிழர் அகதிகள் முகாம்: உதவிபணிகள் தீவிரம்

அமைச்சர் ராமசாமி நடவடிக்கை

சென்னை, ஏப். 5- இலங்கை அகதிகளுக்காக செங்கல்பட்டு மாவட்டத்தில் அமைக்கப்பட்டுள்ள முகாம்களை அமைச்சர் ராமசாமி சென்று பார்த்தார். நிவாரண வேலைகளை அவர் தீவிரப்படுத்தினார்.

இலங்கையில் இருந்து தமிழகம் வரும் அகதிகளுக்கு மறுவாழ்வு அளிப்பதில் புரட்சித்தலைவர் அரசு மிகுந்த அக்கரைக் கொண்டிருக்கிறது, தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில்அகதிகளுக்கானமுகாம்களை கழக அரசு அமைத்துள்ளது. இந்த முகாம்களில் இலங்கை அகதிகள் வைக்கப்பட்டு, பராமரிக்கப்பட்டு வருகிறார்கள்.

செங்கல்பட்டுமாவட்டத்தில், உள்ள கோவளம், சேளம்பாக்கம், முதலிய இடங்களில் அமைக்கப்பட்டுள்ள முகாம்களை மறுவாழ்வு மற்றும் வேலைவாய்ப்பு துறை அமைச்சர்டி. ராமசாமி சென்று பார்த்தார். அங்குள்ள அகதிகளின் குறைகளை அவர் கேட்டறிந்தார்.



தமிழக அரசு மலிவுவிலையில் வழங்கிவரும் அரிசி, மற்றும் உதவித் தொகை, மருத்துவ வசதி, குடிநீர் வசதி ஆகியவை முறையாக இலங்கை அகதிகளுக்கு கிடைப்பது பற்றியும்அவர் விசாரித்து அறிந்தார். பெண் அகதிகளுக்கு அவர் புடவைகளை வழங்கினார்.

அகதிகள் சமையல்செய்வதற்கு தற்காலிக சமையல் கூடம் அமைக்கும்படியும் அதிகாரிகளுக்கு அமைச்சர் ராமசாமி உத்தரவிட்டார்.

## லாரி விபத்து: 3 பேர் சாவு

வாரங்கல், ஏப். 5— ஆந்திர மாநிலம் வாரங்கலை அடுத்த லட்சுமி

(3-ம் பத்தி பார்க்க)

8 ம் பத்தி தொடர்ச்சி

புரம் கிராமத்தில் ஏற்பட்ட லாரி விபத்தில் 3பேர்இறத்தனர் 19பேர் காயமடைந்தனர்.

ஒரு திருப்பத்தில் லாரி திரும்புகையில் லாரி கவிழ்ந்ததைஅடுத்து இந்த விபத்து ஏற்பட்டது.



முதலவர் புரட்சித்தலைவரை ஆஸ்திரேலிய கான்சல் ஜெனரல் கிரகாம ஹாக்கா சந்தித்துப் பேசினார்.

# ★ கருணைக்கடலின் கல்விச்சேவை ★

ஆன்மீகத் துறை மட்டுமின்றி கல்வித்துறை சமுதாயத் துறை அனைத்திலும்சேவை புரிகிறார்கள் காஞ்சிமுனிவர்கள்,

பூந்தமல்லி அருகே உள்ள நசரத்பேட்டையில் காஞ்சிப் பெரியவர்கள் ஆசி - ஆதரவு ஆகியவற்றுடன் ஸ்ரீவெங்கடேஸ்வரா என்ஜினீயரிங் கல்லூரி துவக்கப்பட்டுள்ளது. ஏப்ரல் 8-ந்தேதி இதை ஆளுநர் குரானா திறந்து வைக்கிறார்.

"சாதி, மதபேதமின்றி அனைவரும்இந்தகல்லூரியில்சேர்த்துக் கொள்ளப் படுவார்கள். அரசு விதித்துள்ள விதிமுறைகளை கடைபிடிக்கச் சொல்லி இருக்கிறேன்" என்று காஞ்சி ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் செய்தியாளர்களிடம் சொன்னார்கள்.

பசுக்கள்கொல்லப்படாமல் காக்கப்படவேண்டும் என்பது மதத்தின் அடிப்படையிலானகருத்துஅல்ல. தாய்ப்பாலுக்கு அடுத்து குழந்தைகளுக்கு ஏற்றது பசும்பால். பசும்பால் அருந்தும் குழந்தைகள் இன்ன ஜாதி என்ற பேதம்கிடையாது. எனவே பசுக்களை கொல்லக்கூடாது என்ற கருத்தை வலியுறுத்துகிறோம் என்றார்கள் சுவாமிகள்.

மேற்கு ஜெர்மனியில் ஏராளமான பசுக்கள் இருப்பதால் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டதைத் தொடர்ந்து பல்லாயிரக்கணக்கான பசுக்களைக் கொல்ல மே.ஜெர்மனி அரசு முடிவுசெய்தது பசுப்பாதுகாப்புக்குழு மற்றும் காஞ்சிமுனிவர்கள் உட்பட பல்வேறு நிறுவனங்களின் வலியுறுத்தலால் பசுக்களை கொல்லுவதை மே.ஜெர்மனி கைவிட்டுவிட்டது.

### இளவரசி உதவி

அந்தப் பசுக்களை வாங்கி விமானம் மூலம் இந்தியாவுக்கு கொண்டுவர சுவாமிகள் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

இவ்வளவு பெரிய விஷயத்திற்கு சுவாமிகளுக்கு உதவியாக இருப்பது யார்?

ஸ்பெயின் நாட்டு மன்னரின் மைத்துனி இளவரசி ஐரினி. இவர் கிரீஸ் நாட்டு மன்னரின் மகள்.

காஞ்சிப் பெரியவர்களின் பக்தை இந்த இளவரசி.

இன்னும் இரண்டு மூன்று மாதங்களில் பசுக்கள்இந்தியாவுக்குகொண்டு வரப்படும்.

வரும் குரோதனஆண்டு பால் பெருக்கு ஆண்டாக இருக்கும் என்று சுவாமிகள் சொன்னார். பசுக்களை இறக்குமதி செய்ய மத்திய—மாநில அரசுகள் அணுகப்பட்டுள்ளதாக அவர் குறிப்பிட்டார்.

பசு பாதுகாப்பு பிரச்சினை தீர ஒரே வழி, பசுவை தேசிய மிருகம் ஆக்க வேண்டும் என்பது சுவாமிகளின் விருப்பம்.

மே மாதம் தமிழ்நாடு துவக்கப்பள்ளி, நடுநிலைப் பள்ளி, ஆசிரியர்களுக்கு பயிற்சி வகுப்புகள் நடக்க இருப்பதை சுவாமிகள் தெரிவித்தார். திருநெல்வேலி, சேலம், திருச்சி, சென்னை, கோவை, ஆகிய மாவட்டங்களைச் சேர்ந்த ஆசிரியர்களுக்கு சுமார் 50 முதல் 70 பேர் தேர்ந்தெடுத்து நீதி போதனை பயிற்சி அளிக்கப்படும் பயிற்சி காலத்தில் ஏற்படும் செலவை இந்து சமய மன்றம் ஏற்கும் கோவையில் பெண்களுக்கும் சென்னையில் இளைஞர்களுக்கும் (18 முதல் 26 வயதுக்கு உட்பட்டவர்கள்) நீதி போதனை பயிற்சி அளிக்கப்படும். இதில் சேர விரும்புவோர் "இந்து சமய மன்றம், 1, சாலைத் தெரு, காஞ்சிபுரம்" என்ற முகவரிக்கு விண்ணப்பிக்கலாம் என்று சுவாமிகள் தெரிவித்தார். எல்லா



மத ஆசிரியர்களும் இதில் சேரலாம் என்றும் சுவாமிகள் சொன்னார்.

### உறுதி மொழி

இளைஞர் ஆண்டில் இளைஞர்களும், மாணவர்களும் கீழ்க்கண்ட உறுதிமொழி எடுத்து தங்கள் கல்வி நிறுவனத் தலைவர்கள் மூலம் உறுதிமொழியை ஸ்ரீ மடத்துக்கு அனுப்பலாம். எடுக்க வேண்டிய உறுதிமொழி!

பாரத தேசத்திற்குத் தீங்கு விளைவிக்கும் படியாக நடக்க மாட்டேன். தேசிய எண்ணத்துடன் வாழ்வேன். எனது பண்பாடு, கலாச்சாரம் ஆகியவற்றைக் காக்க உதவுவேன். என் மதத்தில் அபிமானம் இருக்கும் அதே நேரத்தில் பிறமதங்களையும் பிறமத மக்களையும் விரோதிக்காமல் அவர்களின் உணர்வுகளை கவுரவிப்பேன்என்றுஉறுதிமொழி ஏற்க வேண்டும் என்பது சுவாமிகளின் விருப்பம்.

### ஏழைகட்கு உதவிக்கரம்

நம் தேசத்திற்காக சுதந்திரப் போராட்ட காலத்தில் போராடிய ஏதாவது ஒரு தியாகி பற்றி 2 ஆயிரம் வார்த்தைகளில் கட்டுரை எழுத வேண்டும். ஆன்மீக அடிப்படையில் தேசிய ஒருமைப்பாட்டை காக்க இப்போது என்ன செய்ய வேண்டும் என்ற கருத்தைபிரதிபலிப்பதாக கட்டுரை இருக்க வேண்டும். சிறந்த கட்டுரைக்கு தங்கப்பதக்கம் பரிசு உண்டு என்றும் சுவாமிகள் சொன்னார்.

ஸ்ரீ மடங்களின் சேவைகள், சாதி, மதங்களைக் கடந்து ஏழை எளிய மக்களை எட்டி, அருளாசி வழங்க வேண்டும் என்பதில் சுவாமிகளுக்கு உள்ள அக்கறைபுரிகிறது.

# மத்திய சிறையில் மகாவீரர் ஜெயந்தி

சென்னை, ஏப். 5- சென்னை மத்திய சிறையில் ஜெயின் யுவக் சங்கம் சார்பில் மகாவீரர்பிறந்த நாள் விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

வர்த்தக வரித் துறை அமைச்சர்வீராசாமிவிழாவில் கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றினார்.

இப்படிப்பட்ட விழாக்கள் சிறை கைதிகளுக்கு இனிமையான வாழ்க்கை அமைய வழிவகுக்கும் என்று அவர் நம்பிக்கை தெரிவித்தார். தண்டனைக் காலம் முடிந்து வெளியில் செல்லுகையில் நல்ல மனிதர்களாக மாறி சமுதாய பணி ஆற்றிட தங்களை கைதிகள் தயார் செய்து கொள்ளவேண்டும் என்றும் அவர் கூறினார்.

## ஏலவிற்பனை

1) S.Bhawarlal sowcar, No: 91 Market street. Perambur Madras-11. (1-5-83 முதல் 28-2-84 வரை) ஏலத் தேதி 19-4-85 அன்று மதியம் 2மணிக்கும்.

2) B.Rikhab chand Jain No,61 PMRoad. Perambur, Madras-11 (1-6-83 முதல் 31-3-84 வரை) ஏலத்தேதி 19-4-85 அன்று பகல் 12 மணிக்கும்,

3) A.Bhawarlal, No: 98. A.Marketstreet, Madras- 11 (1.3.83 முதல் 31.12.83 வரை) ஏலத்தேதி. 19.4,85 அன்று மதியம் 2 மணிக்கும்,

4) H.IndarchandJain.No 13, PortuesRoad, Ayanavaram, Madras-23. (1.1.83 முதல் வரை) ஏலத் தேதி. 20-4-85 அன்று காலை 10 மணிக்கும்

5. Meena Bai No 82/2L, B, Road Adyar Ms. 20. (1-11-82 முதல் 31-1-84 3 முதல் 28-2.84 வரை) ஏலத்தேதி 24-4-85 அன்று மதியம் 3-மணிக்கும்,

6. Jaiveer No 32 Ellamman Koil St. Ms. 85 (1-5-83 முதல் 31-1-84 வரை) ஏலத் தேதி 24-4.85 அன்று பகல் 12-மணிக்கும்,

7) G. Vijay&Co, No 85, Thiruvalluvar Puram, Ist Choolaimedu, Madras-94 (1-2-84 முதல் 31-3-84 வரை) ஏலத்தேதி 25-4-85 அன்று மதியம் 11 மணிக்கும்

8) M/s C. Krishnalal & Co, No: 10, Pulliyur Main Road, Trust Puram. Ms-24 (1-9-83 முதல் 29-2-84 வரை) ஏலத்தேதி 25-4-85 அன்று மதியம் 1 மணிக்கும்,

9. Manoj No. 13 Thiruvallvarpuram Ist Street Choolaimedu, Madras-94 (24.8.82 முதல் 31.12.83 வரை) ஏலத்தேதி 26.4.85 அன்று பகல் 12 மணிக்கும்,

10. K. K. Sharma 62, Sivan Koil Street, Kodambakkam Madras-24 (1.2,83 முதல் 29.2.84 வரை) ஏலத்தேதி 26.4.85 அன்று மதியம் 3 மணிக்கும்,

11) Ugamchand sethiya No:8 Barracks Gate Road Ms-12 (24-8-82 முதல் 31-12-83 வரை) ஏலத் தேதி 27-4-85 அன்று மதியம் 2 மணிக்கும்

12) M. Rajmal Jain. No:87 T.K. Mudali street. Choolai, Madras - 112 (1-4-83 முதல் 31-1-84 வரை) ஏலத் தேதி 29-4-85 அன்று பகல் 12 மணிக்கும்,

13. M, Uttam Chand, No: 2, North Mada Veethi, Madras-34. (Nungambakkam) (31-12-79க்கு முன்புவரை) ஏலத்தேதி 30 4-85 அன்று காலை 11 மணிக்கும்,

14. Gothi & Co, No: 17, Tank Bund Road, Nunagmbakkam Ms-34. (1-3-83 முதல் 29-2-84 வரை) ஏலத் தேதி 30-4-85அன்றுமதியம் 2 மணிக்கும்,

15. PremeenaJain, No.7B Dhandeswarar Nagar Ist Main Road. Velacheri Madras-42 (1.3.83 முதல் 31.1.84 வரை) ஏலத்தேதி 25.4.85 அன்று காலை 11 மணிக்கும்,

மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன், பொன் அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் M. தரம்சந்த் ஜெயின், 150 சச்சிதானந்தம் தெரு சென்னை-12 மாவட்ட ஆட்சியரின் உத்தரவுப்படி மேற்குறிப்பிட்ட ஏலத்தேதிகளில் ஏலம் போடுவார்.

தீவிர நடவடிக்கைகள் எடுத்து

# தொழில்பிரச்சினையை தீர்த்து வைக்கும் புரட்சித்தலைவர் அரசு

### ஈரோடு மாநாட்டில் க. சுப்பு பாராட்டு

சென்னை, ஏப். 5- தொழிலாளர்களின் பிரச்சினைகள் தீர புரட்சித்தலைவர் அரசு பல்வேறு நடவடிக்கைகளை எடுத்துள்ளது என்று கழக தொழிலாளர் அணிச் செயலாளர் க. சுப்பு கூறினார்.

ஈரோட்டில் நடைபெற்ற அண்ணாதொழிற் சங்கப் பேரவையின் சர்க்கரைப் பிரிவுத் தொழிலாளர் மாநில மாநாட்டில் கலந்து கொண்டு கழகத் தொழிலாளர் அணிச்செயலாளர் க. சுப்பு பேசுகையில் கூறியதாவது:-

இந்த மாநாடு நடைபெறும் நாள் மிகவும் முக்கியமான நாளாகும். நமது இதய தெய்வம் புரட்சித் தலைவர் மூன்றாவது முறையாக தமிழகத்தின் முதலமைச்சராகப் பொறுபேற்றுக் கொண்டதற்குப் பிறகு, மாநில அளவில் நடைபெறுகிற முதலாவதுதொழிலாளர்மாநாடு இந்த மாநாடு.

புரட்சித்தலைவர் உடல் நலம் குன்றி மருத்துவ மனையில் அனுமதிக்கப் படுவதற்கு முன்னர் அவர் இறுதியாகக் கலந்து கொண்ட முக்கியநிகழ்ச்சி சென்னையில்நடைபெற்ற அண்ணா தொழிற் சங்கப் பேரவைசிறப்புமாநாட்டு நிகழ்ச்சியாகும்.

## மகிழ்ச்சிப் பெருக்கு

அதில் அவர் ஆற்றிய எழுச்சியும் உணர்ச்சியும்மிக்க உரை இன்னும் நம் காதுகளில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. இடைக்காலத்தில் அவருடைய இனிய முகத்தைக்காணாமலும்கனிந்த மொழியைக் கேட்காமலும், ஏங்கிக் கிடந்த நமது நெஞ்சங்கள் இன்று தான் மகிழ்ச்சிப் பெருக்கால் நிறைந்திருக்கின்றன

மாநிலந் தழுவியநமது, சர்க்கரை ஆலைத் தொழிலாளர் மாநாட்டினை ஈரோட்டில் நடத்திடவும் சர்க்கரைப் பிரிவுத் தொழிலாளர்க்கென தனிக் கூட்டமைப்பினை உருவாக்கிடவும், புரட்சித் தலைவர் மகிழ்ச்சியோடு ஒப்புதல் அளித்தார். அத்துடன் அண்ணா பிறந்தநாள் விழா மே தினவிழா, போன்ற நிகழ்ச்சிகளையாவது தனியாக நடத்திக் கொள்வதற்கும் தொழிற்சங்கங்களுக்கு அனுமதி வேண்டுமென்று கேட்டோம்; அதற்கும் தம் இசைவினை அளித்தார்.

## தொழிலாளர் மீது நம்பிக்கை

எல்லாவற்றுக்கும் மேலாக எஸ். இராகவானந்தம், அவர்களை கழகத்தின் பொது செயலாளராகவும் மற்றொரு தொழிற்சங்கவாதியான எஸ். ஆர். இராதா அவர்களை துணைப் பொதுச்செயலாளராகவும் நியமித்து தொழிலாளர்வர்க்கத்தின் பால் தமக்கிருக்கும் அளவு கடந்த அன்பினையும் நம்பிக்கையையும் வெளிப் படுத்தியிருக்கிறார். அதற்காக அவருக்கு நாம் என்றென்றும் நன்றி செலுத்தவும், நம்மீது வைத்துள்ள நம்பிக்கைக்குக் குந்தகம் ஏற்படாது காப்பாற்றவும் கடன் பட்டிருக்கிறோம்,

மாண்புமிகு அமைச்சர்கள் கே.ஏ.கே. அவர்களும், சு. முத்துசாமி அவர்களும்இந்த மாநாட்டில் கலந்து கொள்வது மிகவும் பொருத்தமானதாகும்.

போக்குவரத்துத் துறை அமைச்சர் இங்கே பேசும் போது பட்டியல் போட்டுக் காட்டியதைப் போல நமது தொழிலாளர்களுக்கு வழங்கப்பட்டுள்ள எண்ணற்ற சலுகைகளுக்காகவும், ஊதிய உயர்வுக்காகவும், அவரை நாம் எவ்வளவு பாராட்டினாலும் தகும். யாரும் அதைக் குறை கூற முடியாது.

## ஆலைகள் திறப்பு

அதேபோன்று அமைச்சர் கே. ஏ. கே. அவர்களையும் நாம் எவ்வளவு வேண்டுமானாலும் பாராட்டலாம். அந்த அளவிற்கு அவர் பொறுப் பேற்றுக்கொண்ட இந்த குறுகிய காலத்திற்குள்பல்வேறு நல்ல காரியங்கள் நடைபெற்றிருக்கின்றன. ஓராண்டுக் காலம், பிரச்சினைகள் தீர்க்கப்படாமல் மூடப்பட்டுக் கிடந்த சென்னையிலுள்ள, இந்தியாசிமிண்ட்ஸ்பவுண்டரி தொழிற்சாலை திறக்கப்பட்டிருக்கிறது.

அதேபோன்றுபோனஸ் தகராறினால், நீண்ட காலம் மூடப்பட்டிருந்த பவானிநூற்பாலைஇன்று திறக்கப்பட்டு நல்லமுறையில் இயங்கி வருகிறது; கோவை ஜனார்த்தனா மில்லைத் திறப்பதற்கு உடன்பாடு எட்டப்பட்டுநடவடிக்கை துரிதமாக மேற்கொள்ளப்பட்டு வருகிறது. அதே போன்று ஆலை மூடப்பட்டதால், ஊதியமிழந்து அல்லற்பட்டுக் கொண்டிருக்கும் ஸ்ரீ ஹரிமில்தொழிலாளர்களுக்கு முதலமைச்சர் நிவாரண நிதியிலிருந்து பண உதவி வழங்கப்பட்டுள்ளது.

## ஊதிய உயர்வு

சென்னையில் பால் வழங்கும்நிறுவன ஊழியர்களோடு உடன்பாடு எட்டப்பட்டு, ஊதிய உயர்வுக்கு வழிவகை செய்யப்பட்டுள்ளது. இப்படி, எண்ணற்ற சாதனைகளின் சொந்தக்காரராக வந்திருக்கும் புரட்சித்தலைவரின் அன்புத்தம்பி கே. ஏ. கே. அவர்களை எவ்வளவு வேண்டுமானாலும் பாராட்டலாம்.

பால் விலை உயர்வுக்கு பாராட்டும், நன்றியும் தெரிவித்து பெரியார் மாவட்டச்செயலாளர் செங்கோட்டையன் இங்கே உரையாற்றினார், காரணம் லிட்டருக்கு 65 காசு உயர்த்தினால் அதில் 50 காசு பால் உற்பத்தியாளருக்கு வழங்கப்படும். மீதியுள்ள 15 காசுகளில் பணியாளர்களுக்கும் பலன் கிடைக்கும்.

தமிழக மக்களின் மீது மேலும் வரிச்சுமையை ஏற்றாமல் மிகுந்த பொறுப்புணர்ச்சியுடன் வரவு-செலவு திட்டத்தை புரட்சித் தலைவர் அரசு கொண்டு வந்திருக்கிறது.

உலகவங்கி நிர்ப்பந்தத்தையும் சூழ்நிலையின் நெருக்குதலையும் சுட்டிக் காட்டி சென்னை நகரத்து மக்கள் மீது பஸ் கட்டணத்தை ஓரளவு உயர்த்த வேண்டியநிர்ப்பந்தம்ஏற்பட்டுவிட்டது அதேபோன்று மற்ற பொருட்களின்விலைவாசியையும் கருத்தில் கொண்டு பால் உற்பத்தியாளர்களுக்கும், பணியாளர்களுக்கும் ஓரளவு நிவாரணம் அளிக்கும்வகையில் பால் விலையும் உயர்த்தப் பட்டுள்ளது.

இவ்வாறு க. சுப்பு பேசினார்.

# லாரி மோதி மரணம்

சென்னை, ஏப், 5- லாரிமோதி ஒருவர் அந்த இடத்திலேயே மரணம் அடைந்தார்.

அவரது பெயர் முத்து வயது 30 வயா சர்பாடியைச் சேர்ந்தவர் லாரியில் கூலி வேலை பார்த்து வந்தவர்.

நேற்றுஅவர் எருக்கஞ்சேரி நெடுஞ் சாலையில் சென்று கொண்டு இருந்த போது பின்னால்வந்தலாரிஒன்று மோதி படுகாயமடைந்து அந்த இடத்திலேயே மரணம் அடைந்தார். விபத்தை ஏற்படுத்திய லாரி டிரைவர்தலைமறைவாகி விட்டார்.

போலீசார் புலன் விசாரணை செய்து வருகின்றனர்.

# கிணற்றில் வாலிபர் பிணம்

சென்னை, ஏப். 5. தாம்பரம் அருகே கே.வி. நகர் பகுதி வயல் வெளியில் கிணறு ஒன்றில் 25 வயதுள்ள வாலிபர் உடல் மிதந்துகொண்டுஇருந்தது

அவர் யார், என்ன பெயர் என்ற விவரம் தெரியவில்லை. ஜட்டிமட்டும் அணிந்த நிலையில் உடல் கிடந்தது.

தாம்பரம் போலீசார் பிணத்தைக் கைப்பற்றி விசாரித்து வருகின்றனர்

# ஏழைகளுக்கு வீட்டுமனை பட்டா வழங்க வேண்டும்

### சட்டசபையில் வே. தமிழ்மணி பேச்சு

சென்னை, ஏப். 5- நீண்ட காலமாக புறம்போக்கு மனைகளில் வீடுகட்டி வாழும் ஏழைகளுக்கு மனைப்பட்டா வழங்கவேண்டுமென்று திருப்போரூர் வே. தமிழ்மணி கேட்டுக் கொண்டார்.

சட்டசபையில் கழக உறுப்பினர் திருப்போரூர் வே. தமிழ்மணி பேசுகையில் கூறியதாவது:-

பல்வேறு தொழில்களைச் செய்பவர்கள்என்னுடைய தொகுதியில் இருக்கிறார்கள். என் தொகுதியில் உள்ள மீனவர் குப்பங்களில் விளக்கு வசதி செய்து தர வேண்டும். சோடியம் ஆவிவிளக்குகளை அங்கு அமைத்து தர வேண்டும்.

ஏழைஎளியமக்கள் 50,60 வருடகாலமாக அரசுபுறம்போக்கு மனைகளில் வீடு கட்டி வாழ்ந்து வருகிறார்கள். அந்த மக்களுக்கு அவர்கள் இருக்கும் இடத்தைப் பட்டாவாக்கி மனைப்பட்டா வழங்கிட வேண்டும்.

கிராமப் புறத்திலுள்ள மாணவர்கள் படிப்பதற்காக 15, 20 மைல் செல்ல வேண்டும் அந்த மாணவர்கள் நடந்தும், பஸ்களிலும் செல்லுகிறார்கள். ஏழை விவசாயக் குடும்பங்களில் உள்ள அந்தக் குழந்தைகள் பள்ளிக்கூடம் சென்று படிப்பதற்கு வசதியாக நகரங்களில் உள்ளது போல பஸ்கட்டண சலுகை அளித்திட வேண்டும்.

மீனவர்களுக்காக அரசு கட்டித்தந்த வீடுகளுக்கு பல ஆண்டுகளாக கட்டணம் வாங்கிக் கொண்டிருக்கிறார்கள். அந்த வீடுகளை மானியமாக அந்த மீனவர்களுக்கே வழங்கிட வேண்டுகிறேன்.

திருப்போரூர் நகருக்கு பல்வேறு வளர்ச்சித் திட்டங்களை செயலாக்கிட வேண்டும். திருப்போரூர் நகருக்கு நெமிலியிலிருந்து 2000 பேர் தினமும் வந்து போகிறார்கள். அவர்கள் மழைக்காலங்களில்வரவே முடியாது. எனவே நெமிலி- திருப்போரூர் இடையே பாலம் கட்டித்தரவேண்டுகிறேன்.

இவ்வாறு திருப்போரூர் வே. தமிழ்மணி கூறினார்.

## பரமக்குடி பாலுசாமி

சட்டசபையில் கழக உறுப்பினர் பரமக்குடி பாலுசாமி பேசுகையில் கூறியதாவது:-

பரமக்குடியில் சர்க்கரை ஆலை ஒன்றை அமைத்து தர வேண்டும். என்னுடைய தொகுதியுள்ள ராமநாதபுரம் மாவட்டத்தில் உச்சபுளியில் விமான தளம் ஒன்று இருக்கிறது. அந்த விமான தளத்தை விரிவு படுத்தினால் அவசர காலத்திற்கு பேருதவியாக இருக்கும். எனவே அதை விரிவு படுத்தி தந்திட வேண்டும்,

சேது கால்வாய் திட்டத்தை நிறைவேற்றினால் பெருமளவு பொருளாதார வளர்ச்சிஏற்படும். எனவே சேது கால்வாய் திட்டத்தை நிறைவேற்றித் தரவேண்டும்.

இவ்வாறு பாலுசாமி கூறினார்.

# மாநகராட்சி பள்ளி குழந்தைகளுக்கு மருத்துவ உதவி

### அரிமா சங்கத்தின் சேவை

சென்னை, ஏப். 5. மாநகராட்சி பள்ளிக் குழந்தைகளுக்குத் தொடர்ந்து மருத்துவ பரிசோதனை நடத்தப்படும் என்று அரிமா சங்கத் தலைவர் வி. கே. பத்மநாபன் தெரிவித்தார்.

அரிமா சங்க மாநாடு சென்னையில் நடப்பதை தொடர்ந்து அரிமா சங்க தலைவர் வி. கே. பத்மநாபன் நிருபர்களிடம் கூறியதாவது:—

அரிமா சங்கத்தின் சார்பில் ஒருங்கிணைந்த குழந்தைகள் நலத்திட்டம் செயல்படுத்தப்படுகிறது.

சென்னை மாநகராட்சியில் 34 வட்டங்களில் குழந்தைகளுக்கு போலியோ தடுப்பு ஊசி போட்டுள்ளோம்.

போலீஸ் குடியிருப்புகளிலும் இந்தபணி நடந்தது. மாநகராட்சிமற்றும் இந்திய மருத்துவ கழக உதவியுடன் இவ்வாறு நடக்கிறது.

மாநகராட்சி பள்ளிக் குழந்தைகள் உடல் நிலை பரிசீலிக்கப்பட்டு மருத்துவ உதவி அளிக்கப் படுகிறது.

மாநகராட்சி பள்ளி குழந்தைகள் 20 ஆயிரம் பேர் கண்கள் பரிசோதிக்கப்பட்டு, தேவைப்படுகிறவர்களுக்கு அகர்வால் மருத்துவமனையில் சிகிச்சை அளிக்கப்பட்டது.

இலங்கை அகதிகளுக்கு மண்எண்ணெய் அடுப்பு வழங்கியுள்ளோம்.

பழைய பாட புத்தகங்களையும் நோட்டுகளையும் வாங்கி சீர் படுத்தி அவற்றைஏழைக்குழந்தைகளுக்கு வழங்கவும் முடிவு செய்துள்ளோம்.

இவ்வாறு வி. கே. பத்மநாபன் கூறினார்.

ஐயப்பசாமிகள் பவளவிழா:

## ஆயிரம் பேருக்கு அன்னதானம்

சென்னை. ஏப், 5. சென்னைதிருவேற்காடில் கருமாரி பட்டர் அன்னதான சிவம்ஐயப்ப சுவாமிகளின் பவளவிழா நடைபெற்றது. இதில் 7 ஜோடிகளுக்கு ஐயப்ப சுவாமிகள் திருமணம் நடத்தி வைத்தார். இவ்விழாவில் புலவர் தாமோதரன், முன்னாள் அறங்காவலர் வை. சுந்தரம் கோவிந்தசாமிபலராமன் ராமச்சந்திரன், முனுசாமி அண்ணாதாசன், சீனிவாசன் ஆகியோர்கலந்துகொண்டு மணமக்களை வாழ்த்திப் பேசினர். இச்சமயம்1000 பேருக்கு அன்னதானம் வழங்கப்பட்டது.

# புரட்சித்தலைவர் மருத்துவ செலவு நிதி:

முதல்வர் புரட்சித்தலைவர் மருத்துவச் செலவு நிதிக்காக தலைமைக்கழகத்திற்கு வந்துள்ள நிதி விவரம் வருமாறு.

| | ரூபாய் |
|---|---|
| திரு குட்டியப்பசெட்டியார், வேடசந்தூர் | 10 |
| திரு ஜி ராமகிருஷ்ணன், உடுமலை | 10 |
| திரு எம் பொன்னம்பலம், சென்னை- 12 | 10 |
| திருமதி பிருந்தாகுமாரி, கோவை | 10 |
| திரு ஜி சீனிவாசன், சாத்தூர் | 10 |
| செல்வி கா விஜயலட்சுமி பழைய பல்லாவரம் | 10 |
| திரு பி சிவலிங்கம், கோபி | 10 |
| திரு ஆர் ராகவலு திருத்தணி | 10 |
| திரு கே சொக்கலிங்கம், கீழ்வேலூர் | 10 |
| திரு எம் நடராஜன் பொள்ளாச்சி | 10 |
| திரு எம் நீலகண்டன், குடியாத்தம் | 10 |
| திரு எம் பயாஸ்வைஸ், தூத்துக்குடி | 10 |
| திரு பி பாலசுப்பிரமணியம் தூத்துக்குடி | 10 |
| திரு எஸ் சுந்தரம் ராமநாதபுரம் | 10 |
| திரு கே முத்து ராமேஸ்வரம் | 10 |
| திரு எஸ். குமார், திருக்கழுக்குன்றம் | 10 |
| திரு எஸ். ராஜேந்திரன், தஞ்சை | 10 |
| திரு டி. பன்னீர்செல்வம், தென்காசி | 10 |
| திரு சா.மு. வக்கிரவேலன், திருப்பத்தூர் | 10 |
| திரு ஜே. தானியேல், மதுரை | 10 |
| திரு பி.எஸ். அமீத், அரூர் | 10 |
| திரு எஸ். சிங்காரம், அரூர் | 10 |
| திரு கே. மணி, பாலக்காடு | 10 |
| திரு ஏ ஜேசுதாஸ், குமரி | 10 |
| திரு பி டி. எம் ராமகிருஷ்ணன் தோவாளை | 10 |
| திரு பி மோகன் கரூர் | 10 |
| திரு டி கணேசன், ராயப்பேட்டை | 10 |
| திரு எம் திருமூர்த்தி திருச்செங்கோடு | 10 |
| திரு எம் சையத்முகமது சேலம் | 10 |
| திரு வி இராமலிங்கம் போளூர் | 10 |
| திரு கே அம்மாசு தேவர் கும்பகோணம் | 10 |
| திரு ஏ செல்லம்மாள், பவானி | 10 |
| திரு எம் கே பாலன் பள்ளிப்பட்டு | 10 |
| திரு திருழனிவேலு அரவக்குறிச்சி | 10 |
| திரு ப இராமலிங்கம் சேத்தியாத் தோப்பு | 10 |
| திரு ம உதயசூரியன் மணப்பாறை | 10 |
| திரு இரா பொதுவிடை தலைஞாயிறு | 10 |
| திரு ரா மணி மயிலாடுதுறை | 9 |
| திரு பி தாஸ் கோடம்பாக்கம் | 5 |
| திரு ஜே செல்வராஜ் நந்தனம் | 5 |
| திரு எஸ் பி உசேன் வாலாஜாபாத் | 5 |
| திரு எஸ் மீனாட்சிசுந்தரம் புதுக்கோட்டை | 5 |
| திரு கொடுமுடி கோபால் போத்தனூர் | 5 |
| திரு பி ராசமாணிக்கம் நல்லம்பள்ளி | 5 |
| திரு கே எஸ் ராமசாமி கள்ளிக்குடி | 5 |
| திரு தி பாஸ்கரன் திருவாரூர் | 5 |
| திரு பி எஸ் லதீபாபேகம் | 5 |
| திரு எஸ் கோவர்த்தனன் சென்னை | 5 |
| திரு எஸ் சொக்கலிங்கம், ஒட்டப்பிடாரம் | 5 |
| திரு ஆர் எல் சஞ்சீனி, சோளிங்கர் | 5 |
| திரு ஆர் மனோகரன், காரைக்கால் | 5 |
| திரு பி சுதா காஞ்சிக்கோவில் | 5 |
| திரு கே ஒய் உபேதுல்லாகான் ஆரணி | 5 |
| திரு ஆர் டில்லிபாபு ஆரணி | 5 |
| திருமதி சாரதாம்பாள் ஆற்காடு | 5 |
| ஸ்ரீ சவுண்டேஸ்வரி மகாஜன சாரிட்டி டிரஸ்ட், சேலம் | 10,001 |
| திரு கே கருணாகரன், மலேயா யூனிவர்ஸிட்டி | 1,000 |
| திரு டி ஆனந்தன், எல்லீஸ் ரோடு | 1,025 |
| சென்னை பெருநகர் டீ & காபி கடை உரிமையாளர்கள் சங்கம், பீட்டர்ஸ் சாலை | 2,005 |
| திரு இரா. மார்கசகாயம், கல்லக்குடி | 1,001 |
| சென்னை எடிபுல் ஆயில் மர்சன்ட்ஸ் அசோசியேசன் | 2,001 |
| சரவணபவா எண்டர்பிரைசஸ் | 1,000 |
| திரு ஜி. கஸ்தூரிரங்கன், மேனேஜிங் பார்ட்னர் ஜி கே ஆர் இன்ஜினீயரிங் இண்டஸ்டிரீஸ் | 1,000 |
| திரு ஜி கஸ்தூரிரங்கன், ஜி கே ஆர் இண்டஸ்டிரீஸ் | 1,000 |
| திரு க நரசிம்மபல்லவன், எம். எல். ஏ | 1,105 |
| செயலாளர், தென் ஆற்காடு மாவட்ட தமிழாசிரியர் கழகம் | 1001 |
| திரு பி தீனதயாலு ரெட்டியார், ஏ ஜே எஸ் நிதி உயர்நிலை பள்ளி, ஆலந்தூர் | 1,001 |
| செல்வி சலீமா ஆறாம் வகுப்பு ஏ ஜே எஸ் நிதி உயர்நிலைப்பள்ளி ஆலந்தூர் | 50 |
| திரு டி எம் முத்து ஏ ஜே எஸ் நிதி உயர்நிலைப்பள்ளி ஆலந்தூர் | 101 |
| மாண்புமிகு மு தம்பித்துரை பாராளுமன்ற துணை சபாநாயகர் | 5,001 |
| திருமதி ஆர் சுலோசனா, அடையாறு | 50 |
| திரு என் சௌந்தரராசன் எம். பி. சிவகாசி | 1,500 |
| திரு என் தராசந்த் துகார் துணைத்தலைவர் சென்னை பவுன் புரோக்கர் அசோசியேசன் | 1,00,000 |
| திரு எம் நாகராஜன் அண்ணாநகர் | 1,000 |
| டி எஸ் ஆர் & கம்பெனி இராமாபுரம் | 10,100 |

# இதுவன்றோ நட்பு - நம்பிக்கை

மாஸ்கோ, ஏப், 5- சோவியத் நாட்டின் அதி நவீனபோர் விமானத்தை முதன் முறையாகப்பார்த்தவர் என்ற பெருமை இந்திய பாதுகாப்பு அமைச்சர் நரசிம்மராவிற்குக்கிடைத்தது.

நவீன தொழில் நுட்பத்தின் சிகரமாக விளங்கும் இவ்விமானத்தை எந்த வெளி நாட்டவருக்கும் ரஷ்யா இதுவரை காண்பித்ததில்லை. இந்த விமானத்தை மட்டுமல்ல நவீனரக ஹெலிகாப்டர்களையும் ரஷ்ய பாதுகாப்புத் தளங்களையும் பார்வையிட நரசிம்மராவிற்கு ரஷ்யா வசதிசெய்து கொடுத்தது.

பாகிஸ்தானுக்கு அமெரிக்காவழங்க இசைந்துள்ள வேவுவிமானங்களைவிட இந்த ரஷ்யஅதிநவீன விமானங்கள் சிறப்பானவை எனக் கூறப்படுகிறது. இந்த விமானங்களை சோஷலிஸ்ட் நாடுகளுக்கு கூட ரஷியா இது வரை காட்டியதில்லை. நரசிம்மராவிற்கு இந்த விமானங்களைக் காட்டியதிலிருந்தே இந்தியாவின்பாதுகாப்பிற்கு உதவுவதில் ரஷ்யாவிற்கு இருக்கிற உண்மையான அக்கறை தெரிகிறது என்று அரசியல் வட்டாரங்களில் கருதப்படுகிறது.

## திருமணம்

பத்திரிகையாளர் மு. புரட்சிமணியின் மூத்த மகனும், மெல்லிசைப் பாடகர் சாபரினா வி. சந்திரனுக்கும் இலங்கையைச் சேர்ந்த திருவேலாயுதத்தின் மகள் சாந்தகுமாரிக்கும் திருமணம் கொழும்புவில் சிறப்பாகநடைபெற்றது.

பிறகு சென்னை மயிலாப்பூர் கபாலீசுவரர் கற்பகாம்பாள் திருமண மண்டபத்தில் வரவேற்பு நடைபெற்றது.

அண்ணா தொழிற்சங்கப் பேரவை,
தலைமை நிலையம்,
275, அவ்வை சண்முகம் சாலை,
சென்னை—14.

# நெய்வேலி அண்ணா தொழிலாளர் ஊழியர் சங்கத் தோழர்கட்கு...

நெய்வேலி அண்ணா தொழிலாளர் ஊழியர் சங்க நிர்வாகிகள் தேர்தலை உடனடியாக நடத்துவதென்ற பேரவையின் முடிவுக்கேற்ப தேர்தல் பணிகளைக் கவனிப்பதற்காக பேரவைப் பிரதிநிதியாக பேரவைப் பொருளாளர் திரு. கே. ராஜேந்திரன அவர்கள் 8—4—85 காலை 9 மணிக்கு நெய்வேலி சங்க அலுவலகத்திற்கு நேரில் வருவார்.

சங்க நிர்வாகிகள் உடனிருந்து அனைத்து ஒத்துழைப்பை நல்கி தேர்தலை முறையாக, விரைவாக நடத்துவதற்கு உறுதுணையாக இருக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

வை. பெருமாள்
பொதுச்செயலாளர்
அண்ணா தொழிற்சங்கப் பேரவை

சென்னை-16
-4-85

"வளர்த்த கடா மார்பில் பாய்கிறது"

# எல்லையில் வங்க ராணுவம் குவிப்பு

# எந்த நிலையையும் சமாளிக்க

# இந்திய ராணுவம் தயார்நிலை

**பெலோனியா (திரிபுரா), ஏப்- 5- இந்திய - வங்க தேசங்களுக்கிடையில் திரிபுராவின் சர்வதேச எல்லையில் வங்க தேச ராணுவம் பெருமளவில் குவிக்கப்பட்டு வருவதாகத் தகவல்கள் வந்துள்ளன. இதனால் இந்திய எல்லை பாதுகாப்புப் படை முகாம்கள்எந்த த் தாக்குதலையும் முறியடிக்கத் தயார் நிலையில் உள்ளன.**

இந்திய — வங்கதேசங்களுக்கிடையில் திரிபுராவின் சர்வதேச எல்லையில் வங்கதேச ராணுவம் பெருமளவில் குவிக்கப்பட்டு வருகிறது.

எல்லையிலிருந்துநான்கு கிலோ மீட்டர் தூரத்திலுள்ள அம்ஜத்நகர்—பெலோனியா பகுதி முழுவதும் வங்கதேச ராணுவம் மற்றும் துப்பாக்கிப் படையினர் குவிக்கப்பட்டு வருவதாக நம்பகமான தகவல்கள் கூறுகின்றன

திரிபுராவின் தென் மாவட்ட எல்லையோரமுள்ள பிரச்சினைக்குரிய முஹுரி ஆற்றுத் திட்டப் பணிகளை வங்க தேசம் அதன் துப்பாக்கிப் படைபிரிவுகளின் பாதுகாப்புடன் முழுமுச்சாக நிறைவேற்றிக் கொண்டிருக்கிறது.

இநத ஆற்றுதிட்டபணிகள் பற்றி விவாதிக்க இரு நாடுகளின் கூட்டு ஆறுகள் கமிஷனின் பேச்சு வார்த்தைகள் எந்த முடிவும்எடுக்காமல் முடிவுற்றபின் படை குவிப்பு நடைபெறுகிறது.

இந்தத் திட்டப்பணிகளை நிறுத்திவைக்க வங்கதேசம் ஏற்கனவே உயர்மட்டமாநாடுஒன்றில் ஒப்புக் கொண்டிருந்தது. இப்பொழுது அதை மீறி துப்பாக்கிப்படையினரைக் கொண்டு திட்டப் பணிகள் அத்து மீறி செயல்படுத்தப்படுகின்றன.

## மிரட்டல்

இரு நாடுகளுக்கிடையிலும் உள்ளூர் மட்டத்தில் நடந்த பேச்சு வார்த்தைகள் தோல்வியடைந்தன.

நமது எல்லையை ஒட்டி இந்தியத்தொழிலாளர்கள் தொடர்ந்து பணியாற்றினால்கடும்விளைவுகள் ஏற்படும் என்றும் வங்க தேசம் மிரட்டியிருக்கிறது.

திரிபுராவின் இந்த எல்லை முழுதும் இந்திய பாதுகாப்புப் படையினர் உஷார் நிலையில் வைக்கப்பட்டுள்ளனர்.



3-பத்தி தொடர்ச்சி

வேண்டும்.

தற்போதுள்ள குறைபாடுகள் நிவர்த்தி செய்யப்படவேண்டும்.

மாதா மாதம் உதவித்தொகை சீராக விடுதலை வீரர்களுக்கு போய்ச் சேர வேண்டும். அரசு வரம்புக்குட்பட்டு உதவித்தொகை கோரிமனுச் செய்பவர்களுக்கு தட்ங்கல் ஏதும் இன்றி உதவித்தொகை வழங்கப்பட வேண்டும். இதற்கான நட்வடிக்கை எடுக்குமாறு உள்துறை அமைச்சர் எஸ். பி. சவானை கேட்டுக் கொள்ளுகிறேன்.

இவ்வாறு தம்பித்துரை பேசினார்.

## சட்டமன்ற நடவடிக்கை: இ. காங்கிரஸ் புறக்கணிப்பு

கல்கத்தா, ஏப். 5- மேற்கு வங்க சட்டமன்ற பிரதான எதிர்க்கட்சியான இ. காங்கிரஸ் சட்டமன்ற நடவடிக்கைகளை புறக்கணித்தது.

இ. காங்கிரஸ் உறுப்பினர்கள்சஸ்பெண்டுசெய்யபட்டதை ஆட்சேபித்தும் "சபாநாயகரின் பழிவாங்கும் பாரபட்சமான போக்கை" எதிர்த்தும் சபை நட்வடிக்கையில் பங்கேற்கவில்லை என்று சட்டமன்ற இ காங்கிரஸ் தலைவர் அப்துல் சத்தார் கூறினார்.

## பிரதமர் ராஜீவ் மோரீஸ் நாடு போகிறார்

புதுடெல்லி, ஏப். 5— புதுடில்லி வந்திருந்த மோரிஸ் நாட்டு பிரதமர் ஜெகநாத், பிரதமர் ராஜீவ் காந்தியையும், சோனியா காந்தியையும் மோரீஸ் நாட்டிற்கு வருமாறு அழைப்பு விடுத்தார். அந்த அழைப்பை ஏற்று இருவரும் மோரீஸ் நாட்டிற்குசெல்கின்றனர்.

மோரீஸ் பிரதமர் ஜெகநாத் தனது இந்திய சுற்றுப்பயணத்தை முடித்துக்கொண்டு நேற்று மோரீஸ் நாட்டிற்கு புறப்பட்டார். விமான நிலையத்தில் அவரை பிரதமர் ராஜீவ் மற்றும் மத்திய அமைச்சர்கள்வழியனுப்பி வைத்தனர்.

வரும் 12-ந் தேதி

## சென்னையில் புதிய விமான நிலையம் திறப்பு விழா

சென்னை, ஏப். 5— சென்னையில் உள்ள உள்நாட்டு விமானப்போக்குவரத்துக்காக கட்டப்பட்டுள்ள புதிய விமான நிலையத் திறப்புவிழா வரும் 12-ந் தேதி நடைபெறுகிறது. மத்திய சுற்றுலா சிவில் விமான போக்குவரத்து அமைச்சர் அசோக் கெலாட் இந்த புதியவிமான நிலையத்தைத் திறந்து வைக்கிறர்.

## சுதந்தரப் போராட்ட வீரர்களுக்கு உதவித் தொகை

### குறைபாடுகளை நீக்க துணைசபாநாயகர் தம்பித்துரை வேண்டுகோள்

**புதுடெல்லி, ஏப். 5- சுதந்தரப் போராட்ட வீரர்களுக்கு உதவித்தொகை வழங்குவதில் உள்ள குறைபாடுகள் அறவே நீக்கப்பட வேண்டும் என்று நாடாளுமன்ற துணை சபாநாயகர் தம்பித்துரை வேண்டுகோள் விடுத்தார்.**

நாடாளுமன்றத்தில் உள்துறை மானியக் கோரிக்கை மீதான விவாதம் நடைபெற்றது.

கழக உறுப்பினரான நாடாளுமன்ற துணை சபாநாயகர் தம்பித்துரை தலைமையில் இந்த விவாதம் நடை பெற்றது. "அப்போது துணைசபாநாயகர் கூறியதாவது:

"சுதந்தரப் போராட்ட வீரர்கள் நாட்டின் சுதந்தரத்துக்காக தங்களது உயிரையும் பணயம் வைத்து போராடிய வீரர்கள் ஆவார்கள்.

அந்தத் தியாகிகள் உதவித் தொகை பெறுவதில் எந்தவிதமான தடங்கல்களும் இருக்கக் கூடாது.

உதவித் தொகையை அனுமதித்து உரியவர்களுக்கு குறித்தநேரத்தில் கிடைக்கச் செய்வதில் குறைபாடுகள் ஏற்படாமல் பார்த்துக்கொள்ள

(1-ம் பத்தி பார்க்க)

குடும்ப நலத் திட்டம்:

## கிராமங்கள்தோறும் பெண் ஆலோசகர்கள் கழக அரசு முடிவு

(6-ம் பத்தி தொடர்ச்சி)

160 இளைஞர் சங்கங்களை அமைத்து அதன் மூலம் குடும்ப நலத் திட்டங்களை சிறப்பான முறையில் செயல்படுத்தத் திட்டமிட்டப்பட்டுள்ளது,

2 குழந்தைகள் உள்ள தம்பதிகளுக்கு பச்சை அட்டைஅடையாளகார்டுகள்கொடுக்கப்படும். அவர்களுக்கு மருத்துவ மனைகளில் உடனடியாக சிகிச்சை பெற சலுகை அளிக்கப்படும். தவிர இந்தத் தம்பதியர்க்கு சலுகை அடிப்படையில் வீடுகள்மற்றும்குடியிருப்பு மனைகள் பெறுவதில்முன்னுரிமை அளிக்கப்படும்,

இவ்வாறு முருகராஜ் கூறினார்.

### தமிழகத்தின் சிறப்பான பணிக்கு மத்திய அரசு பாராட்டு

**சென்னை, ஏப். 5- குடும்ப நலத்திட்டத்தின் கீழ் தாய்மார்கள் நல்லமுறையில் மேன மேலும் பயனடைய கிராமங்கள் தோறும் பெண் அமைப்பாளர்கள் நியமிக்கப்படவிருக்கிறார்கள்,**

குடும்பநலத்திட்டத்தை தமிழகம் சிறப்பானமுறையில் செயல்படுத்திவருவது பற்றி மத்திய அரசு பாராட்டு தெரிவித்திருக்கிறது.

தமிழ்நாடு குடும்பநலத் திட்ட இயக்குனர் டி. முருகராஜ் நேற்று சென்னையில் நிருபர்களிடையே பேசுகையில் கூறியதாவது:-

சென்ற ஆண்டில்மட்டும் சுமார் 7 லட்சத்துக்கு மேற்பட்ட தம்பதியர் குடும்ப நலதிட்டத்தின்கீழ் சிகிச்சை அளிக்கப் பட்டுள்ளனர்.

## வளம்பெற ஏற்பாடு

இந்த திட்டம் பற்றி மக்களிடையே தீவிரமான முறையில் பிரச்சாரம் செய்வதற்கும்கல்விபோதனைகளை அறிவிப்பதற்கும் மத்திய அரசு1984-85 ஆம் ஆண்டில் 58 லட்சம் ரூபாய் வழங்கியிருக்கிறது குடும்பநலத் திட்ட அறுவை சிகிச்சை செய்து கொண்ட தாய்மார்களுக்குபாதுகாப்பு அளித்து அவர்களுக்கு தேவைப்படும் அறிவுரைகளை தந்து சீரானமுறையில் சுகாதாரத்துடன் அவர்கள் வாழ்வில் வளம் பெறுவதற்கான நடவடிக்கைகளைதமிழக அரசு மேற்கொண்டுள்ளது.

அதற்காக கிராமங்கள் தோறும் பெண் அமைப்பாளர்கள் நியமிக்கப்பட்விருக்கிறார்கள்.

## குடும்ப நல விளம்பரம்

சாலைசந்திப்புகள், பொதுமக்கள் கூடும் முக்கிய இடங்கள் ஆகியவற்றில் குடும்பநலத் திட்டம் பற்றிய விளம்பரங்களை பெரிய அளவில் தற்கும் திட்டமிடப் பட்டுள்ளது.

தமிழகம்பூராவும்சுமார்

4-ம் பத்தி பார்க்க

கோடை வறட்சி வாட்டினாலும்

# குடிநீர் பஞ்சம் வராது தடுக்க நடவடிக்கை

### கழக அரசு ஏற்பாடுகள் குறித்து அமைச்சர் காளிமுத்து தகவல்

**சென்னை, ஏப். 5-கோடை வறட்சி ஏற்பட்டாலும், குடிநீர் தட்டுப்பாடு ஏற்படாமல் இருக்க அரசு எல்லா நடவடிக்கைகளையும் எடுத்துள்ளது என்று அமைச்சர் காளி முத்து கூறினார்.**

சைதாப்பேட்டை தொகுதியில் உள்ள மடுவின்கரை, நேருநகர் காமராஜர் புரம் ஐந்து பாலாங்கு சாலை ரேஸ் வியூகாலனி, போன்ற பகுதிகளில் உள்ள மக்களுக்கு தேவையான குடிநீர் வழங்கப்பட்டு வருகிறது என்று அமைச்சர் காளிமுத்து சட்டசபையில்தெரிவித்தார்

கேள்விநேரத்தின் போது கழக உறுப்பினர் சைதை துரைசாமி கேள்விக்குப் பதிலளிக்கையில் மேலும் அவர் கூறியதாவது:-

தண்ணீர் வசதியில் குறைவு ஏற்படாமல் போதிய அளவு இப்பகுதிகளில் வழங்கப்படும் தமிழகத்தில் கோடை காலத்தில் வறட்சி ஏற்படாத அளவிற்கு குடி தண்ணீர் வழங்குவதற்கு ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து கூறினார்.



Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, MADRAS—600 029.

★ ஏழை, எளிய குழந்தைகளுக்குச் சத்துணவு.
★ 8-ம் வகுப்பு வரை இலவச சீருடை,
★ பழுதடைந்த பள்ளிக்கூடங்களை புதுப்பிக்க நிதி;

# கல்வித்துறையில் மறுமலர்ச்சி ஏற்படுத்திய புரட்சித்தலைவர் அரசு

## சட்டப்பேரவையில்கழகஉறுப்பினர் நரசிம்மபல்லவன் பேச்சு

சென்னை, ஏப் 5- ஏழை-எளிய குழந்தைகளுக்கு சத்துணவு. இலவச சீருடை, பள்ளிக் கட்டிடங்களை சீரமைக்க நிதி, இப்படி பல்வேறு திட்டங்களைச் செயல் படுத்தி கல்வித் துறையில் மறுமலர்ச்சி ஏற்படுத்தியுள்ளது புரட்சித்தலைவர் ஆட்சிதான் என கழக உறுப்பினர் நரசிம்மபல்லவன் சட்டபேரவையில் கூறினார்.

சட்டப்பேரவையில் கழக உறுப்பினர் உத்திரமேரூர் நரசிம்ம பல்லவன் பேசுகையில் கூறியதாவது:—

மூன்றுவேளையும் கூழே குடித்து வாழ்கிற குடும்பத்திலுள்ள ஏழை எளிய குழந்தைகளுக்கு உண்ண சோறுதந்து சீருடைகள் வழங்கிட வழிசெய்த முதல்வர் புரட்சித்தலைவருக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

கல்வியில் நல்ல மறுமலர்ச்சியை உருவாக்க திட்டமிட்டுள்ளதையும் பழுதடைந்த பள்ளிக் கூடங்கள் புதுப்பிக்க நிதி ஒதுக்கி உள்ளதையும் பாராட்டக் கடமைப்பட்டுள்ளோம்.

எனது தொகுதியில் உள்ளஉத்திரமேரூர்பெரிய ஏரியையும், வாலாசாபாத் ஒன்றியத்தில் உள்ள மிகப் பெரிய ஏரியான 32 கிராமங்களுக்கு நீர்ப்பாசனம் பெறக்கூடிய தென்னேரி ஏரியைத் தூர் எடுத்து செப்பனிட்டுத் தரக் கேட்டுக் கொள்கிறேன்.

### இடமிச்சி கால்வாய்

இடமிச்சி கால்வாய் திட்டம் என்றதிட்டத்தை உருவாக்கினால், பாலேஸ்வரத்தில் இருமலைகளுக்கும் இடையே ஒரு பெரிய அணைக்கட்டை உருவாக்கும் திட்டம் அரசிடம் உள்ளது. அதை துரிதப் படுத்தி பல்லாயிரக்கணக்கான நிலங்கள் வளம் பெற, குடிதண்ணீர் பிரச்சினை தீர வழிசெய்ய வேண்டும்.

பழைய சீவரம்-திருமுக்கூடல் இடையே பாலாற்றின் குறுக்கே அணை கட்டி, கடலில் விழும் தண்ணீரை தடுத்து நிறுத்தினால் விவசாயம் பெருமளவில் பயனடையும். இத்திட்டம் 2 கோடி ரூபாய் அளவில் பரிசீலிக்கப்பட்டு நடவடிக்கையில் இருப்பதாக தெரிகிறது. இதனை துரிதப்படுத்திட வேண்டும்.

தமிழகத்திலேயே உத்திரமேரூர் ஒன்றியம் மிகப் பெரியது. இதை இரண்டாகபிரிப்பதற்கு ஏற்கெனவே நடவடிக்கை எடுக்கபட்டது. நிர்வாகவசதியின் பொருட்டும், கிராமவளர்ச்சியின் பொருட்டும் விரைவில் பிரித்து தர வேண்டுகிறேன்.

### உத்திரமேரூரில் நீதி மன்றம்

சுமார் 30 வருடங்களுக்கு மேலாக உரிமை இயல் நீதிமன்றம் ஒன்று எங்கள் உத்திரமேரூரில் இயங்கி வந்தது. அது மீண்டும் இங்கு இயங்குவதற்கு அவசியம் நடவடிக்கை எடுத்து உதவி செய்ய வேண்டுகிறேன்.

உத்திரமேரூரில் கல்லூரி ஒன்றை அமைத்துத் தர வேண்டும்.

கிராமப்புறங்களிலும் விவசாயத்தை தவிரவேறு சரியான தொழில்வளம் இல்லாமல் இருக்கிறது எனது தொகுதியை பின்தங்கிய பகுதியாக அறிவித்து தொழிற்சாலைகள் அமைத்துத்தர வேண்டுகிறேன்.

இவ்வாறு நரசிம்மபல்லவன் கூறினார்.

### இரா. அரிக்குமார்

சட்டப்பேரவையில் கழக உறுப்பினர் பேரணமல்லூர் இரா. அரிக்குமார் பேசுகையில் கூறியதாவது:-

பேரணமல்லூர்தொகுதி பின்தங்கிய தொகுதியாக உள்ளது.

விவசாயிகள் அதிகம் வாழும் பகுதியாக இருப்பதால் கரைப்பூண்டிகிராமத்தின் அருகே செய்யாற்றின் கரையில் ஒரு சர்க்கரை ஆலையை அமைத்து தர வேண்டும்.

சேத்துபட்டு மருத்துவமனையை விரிவு படுத்தி தந்து, பெண்கள் கல்லூரியும் அமைத்து தர வேண்டும்.

பொன்னூர், நெடுங்குணம், வடமாதி மங்கலம் மன்சுராபாத் தேவிகாபுரம் கீழ்பட்டு போன்ற ஊர்களில் அதிக அளவு நெசவாளர்கள் வாழ்ந்து வருகிறார்கள். ஆகவே என்னுடைய தொகுதியில் ஏதேனும் ஒரு இடத்தில் நூற்பு ஆலைஅமைத்துத் தரவேண்டும்.

### குடிநீர் திட்டம்

பேரணமல்லூர் நகருக்கு புதிதாக குடிநீர் திட்டத்தை அமைத்துத்தர வேண்டும்.

சாணார்பாளையம் உயர் நிலைப் பள்ளிக்கு போதிய கட்டிடங்களைக் கட்டித்தந்து உதவுமாறு வேண்டுகிறேன்.

தெள்ளார் ஒன்றியம் 65 பஞ்சாயத்துக்களை கொண்டதாக இருந்து வருகிறது. எனவே தேசூரை மையமாகக்கொண்டு தேசூர் ஊராட்சிஒன்றியம் ஒன்று தனியாகப் பிரித்துத் தந்தால் பயனுள்ளதாக இருக்கும்,

சென்னையிலிருந்து வந்தவாசிக்கு அதிக அளவு பேருந்துகள் செல்கின்றன. சேத்துப்பட்டிலிருந்து சென்னைக்கு பேருந்துகள் கிடையாது. எனவே வந்தவாசியில்தங்கும் பேருந்துகளை சேத்துப்பட்டுவரைநீட்டிஅங்கு தங்குவதற்கு ஏற்பாடு செய்யவும், அத்தோடு சேத்துப்பட்டில், பட்டுக்கோட்டை அழகிரி போக்குவரத்துக் கழகத்தின் பணிமனை கட்டினால் பஸ்கள் பழுது பார்க்க வசதியாக இருக்கும்.

இவ்வாறு அரிக்குமார் கூறினார்.

பேரணாம்பட்டில்

### அமைச்சர் பண்ருட்டியார் பேசுகிறார்

சென்னை, ஏப். 5- இம் மாதம் 9-ந் தேதி (செவ்வாய்கிழமை) மாலை 7 மணிக்கு பேரணாம்பட்டு பேருந்து நிலையத்தில் நடைபெறும் நன்றி அறிவிப்புக் கூட்டத்தில் மின்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கலந்து கொண்டு பேசுகிறார்.

ஒன்றிய செயலாளர் என். ஆர். தேவராஜ் தலைமையிலும், மு. பஜ்லூர்ரஹ்மான் ஆர். விஸ்வநாதன் ஆகியோர் முன்னிலையிலும், சி. வி. வெங்கடேசன் வரவேற்புரையாற்றுகிறார்.

அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன், ஏ. சி. சண்முகம் எம். பி. பேரணாம்பட்டு சட்டமன்ற உறுப்பினர் செ.கு. தமிழரசன் மற்றும் கழக பிரமுகர்கள் கலந்து கொண்டு சிறப்புரையாற்றுகின்றனர்.

எல். சீனிவாசன் நன்றி கூறுகிறார்.

### முதல்வரின் மனைவி எம். பி. ஆனார்

புதுடெல்லி, ஏப். 5— சிக்கிம் மாநில முதல்வர் நாரபகதூர் பண்டாரியின் துணைவியார் தில்குமாரி பண்டாரி சிக்கிம் தொகுதியிலிருந்து நாடாளுமன்றத்திற்குப் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளார்.

### ஆவிச்சி பள்ளிக்கூட பெற்றோர்- ஆசிரியர் சங்க ஆண்டு விழா

சென்னை, ஏப். 5— சென்னை விருகம்பாக்கத்திலுள்ள ஆவிச்சி உயர்நிலைப்பள்ளியின் பெற்றோர்- ஆசிரியர் சங்க ஆண்டு விழா நேற்று நடைபெற்றது. பள்ளிகூட தாளாளர் ஏ. வி. எம். குமரன் இவ்விழாவிற்கு தலைமை வகித்தார். நிதியமைச்சர் டாக்டர் நாவலர் விழாவில் கலந்து கொண்டு சிறந்த மாணவர்களுக்கு பரிசுகள் வழங்குகிறார்.

இலவச மின்சாரம் - கடன் ரத்து போன்ற சலுகைகள் அளித்து

# விவசாயிகள் நிலை உயரச் செய்தவர் புரட்சித்தலைவர்

## சட்டப்பேரவையில் கழக உறுப்பினர் அண்ணாதாசன் பெருமிதம்

சென்னை, ஏப் 5- இலவச மின்சாரம்கடன் ரத்து போன்ற சலுகைகள் அளித்து விவசாயிகள் நிலை உயர வழி கண்டவர் புரட்சித் தலைவர் என சட்ட பேரவையில் கழக உறுப்பினர் அண்ணாதாசன் கூறினார்.

சட்டசபையில் கழக உறுப்பினர் திருவெறும்பூர் அண்ணாதாசன் பேசுகையில் கூறியதாவது:-

இந்த நிதிநிலை அறிக்கையை இது காகித திட்டம், இனிக்காதுஎன்றெல்லாம் எதிர்க்கட்சியினர் பேசினார்கள்.

நீங்கள் ஆண்டீர்களே அப்போது என்னகாகிதத்தில் திட்டங்களை சொல்லாமல்தங்கத்தட்டிலேயா வைத்து தந்தீர்கள்?

புரட்சித்தலைவர் ஆட்சியில்தான் விவசாயிகள் ஓரளவு தலைதூக்கி நிற்கிறார்கள். விவசாயிகளுக்கு இலவச மின்சாரம், குடிசைகளுக்கு ஒரு விளக்கு திட்டத்தை தந்தவர் முதல்வர் புரட்சித் தலைவர்.

### கடன் ரத்து

சிறுவிவசாயிகளின் கடனை ரத்து செய்தவர் முதல்வர் புரட்சித் தலைவர்தான். இதுவரை 200கோடிரூபாய்அளவுக்கு ரத்து செய்திருக்கிறார். எந்தஆட்சியிலாவதுரத்து செய்தார்களா?

உங்கள் ஆட்சியில் (தி.மு.க) எந்த சட்டத்தையாவது மணக்கச் செய்தீர்களா? கூவத்தை மணக்கவைப்போம் என்று பல கூத்து நடத்தியதுதெரியும்

எனது தொகுதியில் 5 ஆயிரம் கல் உடைக்கும் தொழிலாளர்கள் இருக்கிறார்கள். அவர்களின் கோரிக்கை மீது நடவடிக்கை எடுக்கப்படும் என்று முன்பு புரட்சித்தலைவர் கூறியிருக்கிறார்.

### வாழ்வில் ஏற்றம்

பளபளப்பான கற்கள் மீதுவரி விதிப்பு செய்திருப்பதை வரவேற்கிறேன். இதனால் கல் உடைக்கும் தொழிலாளர்களின் வாழ்வில் ஏற்றம் ஏற்படும்.

170 கோடி ரூபாயில் கனரக உலோக கலவை தொழிற்சாலை என்னுடைய தொகுதியில் வர இருப்பதாக ஆளுநர்உரையில் குறிப்பிட்டப்பட்டுள்ளது.

அதற்காக மத்திய அரசுக்கும், அந்த தொழிற்சாலையை வாதாடி பெற்றுத்தந்த தமிழகமுதல்வர் புரட்சித் தலைவருக்கும் நன்றியைத் தொகுதி மக்கள் சார்பாகவும், எனது சார்பாகவும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இரண்டவது ரயில் பெட்டித் தொழிற்சாலை திட்டத்தை எனது தொகுதிக்கு பெற்றுத்தர வேண்டும் என்று அரசை வேண்டி கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு அண்ணாதாசன் கூறினார்.

மத்திய தொகுப்பிற்கு

### தமிழகம் 7 லட்சம் டன் நெல் அளித்தது

புதுடெல்லி, ஏப். 5— மத்திய தொகுப்புக்கு சென்ற ஆண்டுவாக்கில் தமிழக அரசு 7 லட்சம் டன் நெல்வழங்கியுள்ளது.

பொதுவாக சென்ற ஆண்டில் (1984-85) இந்தியா முழுவதும் 88 லட்சத்து 3 ஆயிரம் டன் நெல் கொள்முதல் செய்யப்பட்டு உள்ளது. அரசாங்க ஏஜென்சிகள் மூலம் இந்தநெல் கடந்த மார்ச் 28ம்தேதி வரை கொள்முதல்செய்யப்பட்டுள்ளது. இதுமுந்தையஆண்டைவிட 20 லட்சம் டன் அதிகம் ஆகும்.

மத்திய தொகுப்புக்கு தமிழகம்சுமார் 7லட்சம்டன் நெல் வழங்கியிருக்கிறது. பஞ்சாப் மாநிலம் சுமார் 43 லட்சம் நெல்லும் ஆந்திர மாநிலம் 12 லட்சம்டன்னும் மத்திய தொகுப்புக்கு வழங்கியுள்ளன.

மத்திய அரசு வெளியிட்டுள்ள பத்திரிகைக் குறிப்பு ஒன்றில் இத்தகவல்கள் கூறப்பட்டுள்ளன.

எதிர்ப்பை மீறி

### தாட்சர் இலங்கை பயணம்

லண்டன், ஏப். 5— ஏழு நாடுகளில் சுற்றுப் பயணம் செய்ய பிரிட்டிஷ் பிரதமர் மார்க்கரெட் தாட்சர் நேற்று (வியாழன்) லண்டனிலிருந்து புறப்பட்டார்.

இலங்கைக்கு அவர் செல்வதற்கு இங்கிலாந்தில் கடும் எதிர்ப்பு ஏற்பட்டது. அதைமீறி அவர் இலங்கை செல்கிறார்.

பதினோரு தினங்கள் சுற்றுப்பயணம் செய்யும் தாட்சர் மலேசியா, சிங்கப்பூர், புருனை இந்தோனேஷியா சவூதிஅரேபியா இலங்கை, இந்தியா, நாடுகளின் உயர்மட்டத் தலைவர்களை சந்திப்பார்.

டெல்லி வரும் போது இந்திய பிரதமர் ராஜீவ் காந்தியை சந்தித்துப்பேசவிருக்கிறார்.

ஹஜ் யாத்திரை

### விமான பயணத்துக்கு குலுக்கல் மூலம் தேர்வு

சென்னை, ஏப். 5- 1985 ஆம் ஆண்டு புனித ஹஜ்ஜுக்கு விமானம் மூலம் பயணம் செல்லவிருக்கும் தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரி மாநிலங்களைச்சேர்ந்த பயணிகள் குலுக்கல்மூலம்தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

சென்னை ராஜாஜி மண்டபத்தில் வரும் 7ம் தேதி ஞாயிறன்று காலை 10 மணி அளவில் இந்த குலுக்கல் நடைபெறும்.

### புதுகோட்டை மாவட்ட கழகக் கூட்டம்

புதுக்கோட்டை, ஏப். 5- புதுக்கோட்டை மாவட்ட கழக கூட்டம் நாளை (6-ந் தேதி) சனிக்கிழமை பிற்பகல் 3 மணி அளவில் புதுக்கோட்டை விஜயா லாட்ஜில் மாவட்ட கழக அவைத்தலைவர் அன்பரசன் தலைமையில் நடைபெறுகிறது.

இக்கூட்டத்தில் ஒன்றியக் கழகச் செயலாளர்கள், மாவட்ட கழக உறுப்பினர்கள், மாவட்ட பிரதிநிதிகள், மாவட்ட எம். ஜி. ஆர். மன்றம், மாவட்ட எம். ஜி. ஆர். இளைஞர் அணி, தொழிற்சங்கப்பிரிவு, மகளிர் அணி, மாணவர்அணி பொறுப்பாளர்கள் ஆகியோர் தவறாமல் கலந்து கொள்ளுமாறு மாவட்ட செயலாளர் எஸ். ரகுபதி கேட்டுக்கொண்டுள்ளார்.





### வேலையற்றோர் இல்லை என்ற நிலை உருவாக கழக அரசின் தீவிர நடவடிக்கை:

# திருச்சி மாவட்டத்தில் 65 ஆயிரம் பேருக்கு ரூ.20 கோடி கடனுதவி

திருச்சி, ஏப். 5- திருச்சி மாவட்டத்தில் நடப் பாண்டில் 65 ஆயிரம் பேருக்கு 20 கோடியே 50 லட்சம் ரூபாய் சுய வேலை வாய்ப்புத் திட்டத்தின் கீழ் கடனுதவி அளிக்கப்படும் என மாவட்டக் கலெக்டர் வி.விஸ்வநாதன் கூறினார்.

திருச்சிமாவட்டக் கலெக்டர்வி.விஸ்வநாதன் நிருபர்களிடம் பேசுகையில் கூறியதாவது:-

திருச்சி மாவட்டத்தில் சுயவேலைவாய்ப்புத் திட்டத்தின் கீழ் 1985-86-ம் ஆண்டிற்கு 65 ஆயிரம் பேர்களுக்கு கடனுதவி அளிக்கத் திட்டமிடப்பட்டுள்ளது.

20 கோடியே 50 லட்ச ரூபாய் கடனுதவியாக அளிக்கப்படும்.

இந்த கடனுதவி மூலம் ஏராளமானவர்கள் வேலைவாய்ப்பு பெறுவார்கள்.

திருச்சி மாவட்டத்தில் குடிநீர் தட்டுப்பாடு உள்ளபகுதிகளில் உடனடியாக 1400 கைப்பம்புகளை அமைக்க உத்திரவிடப்பட்டுள்ளது.

84 85ம் ஆண்டில் 38 ஆயிரத்து 2 பேர்களுக்கு குடும்ப கட்டுப்பாடு அறுவை சிகிச்சைசெய்யப்பட்டுள்ளது.

இவ்வாறு கலெக்டர் விஸ்வநாதன் கூறினார்.

### மாநிலங்களவை கூட்டம் முடிந்தது

புதுடில்லி, ஏப். 5— மாநிலங்களவைக் கூட்டத்தொடரை முடித்து வைத்து குடியரசுத் தலைவர் ஜைல்சிங் உத்தரவு பிறப்பித்திருக்கிறார். மாநிலங்களவைக்கூட்டம் மார்ச் 29-ம் தேதி தேதி குறிப்பிடப்படாமல்ஒத்திவைக்கப்பட்டது நினைவிருக்கலாம்.